*Medical students (stipends)*

*961 *Q*—Sri V. K. KOTHANDARAMAN : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

நர்சுகளுக்கு படிக்கும்போது ஸ்டைபெண்டு பணம் கொடுப்பது போல் டாக்டர்களுக்கு ஏன் கொடுக்கப்பதில்லை ?

The Hon. Sri M. A. MANICKAVELU : Stipends are being given to persons undergoing the nurses' training since there is a great dearth of trained nurses. Further the nurse pupils are assigned regular duties similar to those in service, for a certain number of hours daily, while undergoing their training. They are also required to serve the Government for a minimum period of three years on completion of their training. The same is not the case in respect of medical students.

Sri V. K. KOTHANDARAMAN : ஸார், கிராமப் பகுதிகளிலே இருக்கக்கூடிய ஆஸ்பத்திரிகளிலே பல டாக்டர்கள் வேலை செய்வதற்கு வராத நிலை இருக்கின்ற காரணத்தினாலே, அவர்களும் கண்டிப்பாக நர்சுகளைப் போல் 3 வருஷ காலம் வேலை செய்வதற்கு டாக்டர்களுக்கு ஸ்டைபெண்டு கொடுத்து படிக்க வைத்து, இந்த நிபந்தனை விதிக்க அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

The Hon. Sri M. A. MANICKAVELU : நேற்றே விவாதத் போது நான் இதைப்பற்றிச் சொன்னேன். இப்போது கிராமாந் திரங்களிலே கூட டாக்டர்கள் போய் வேலை செய்கிறார்கள். இப்போது காலியிருப்பது 15, 16 ஸ்தானங்கள்தான். மேலும் இந்த வருஷத்திலே போதுமான டாக்டர்கள் கிடைப்பார்கள் என்று தெரிகிறது. இந்தமாதிரி ஸ்டைபண்ட் கொடுத்தால் 5, 6 வருஷங்கள் கழித்துத்தான் நமக்கு டாக்டர்கள் கிடைப்பார்கள். அதற்குள்ளாகவே இருக்கிற நிலைமை மாறும் என்று கருதுகிறேன்.

Sri S. NAGARAJA MONIGAR : இப்படி சர்க்காருக்கு 3 வருஷத் திற்கு வேலை செய்வதாக எழுதிக் கொடுத்தால் அல்லாது, மனிதப் புண்ணுக்கும், மனிதநோய்க்கும் வைத்தியம் செய்யக்கூடிய பண்பாடு இந்த டாக்டர்களுக்கு இல்லாத காரணத்தால், தேச பக்தியோடு கிராமாந் திரங்களுக்குச் சென்று பணியாற்ற முன் வராத காரணத்தினால், அவர் களுக்கு எந்தவிதமான சலுகையும் அளிக்கக்கூடாது என்று கருதுகிறேன். இதைச் சர்க்கார் செய்யுமா ?

The Hon. Sri M. A. MANICKAVELU : ஏதோ ஒரு காலத்தில் அப்படி இருந்திருக்கலாம். இப்போது டாக்டர்கள் மிகுந்த சேவா உணர்ச்சி யோடு கிராமங்களுக்குப் போய் வேலை செய்கிறார்கள். அதுவும் பல இடை யூறுகளுக்கு இடையே, இதை நானும் நேரில் பார்த்திருக்கிறேன். ரொம்ப ஆர்வமாகக் கூட வேலை செய்கிறார்கள். இந்த மனப்பான்மை அவர்களிடையே இப்போது அதிகமாக வளர்ந்துகொண்டு வருகிறது.

Sri V. K. KOTHANDARAMAN : ஸார், டாக்டர்கள் மிக சேவா மனப்பான்மையுடன் கிராமங்களிலே வேலை செய்வதாக கனம் அமைச்சர் அவர்கள் கூறினார்கள். இப்போது ஒன்றிரண்டு மாதத்திற்கு முன்னால், டி.எம்.எஸ். ஆபீஸிலே டாக்டர்கள் கிராமப் பகுதியிலே இருக்கக்கூடிய ஆஸ்பத்திரிகளுக்குப் போய் வேலை செய்யவேண்டுமென்று சொன்னபோது 60 சத விகிதம் டாக்டர்கள் நாங்கள் கிராமங்களுக்குப் போய் வேலை செய்ய மாட்டோம், நகரத்தில் வேலை கொடுக்காவிட்டால், நாங்கள் தனியாக டிஸ்பென்சரி வைத்து நடத்துகிறோம் என்று சொல்லக்கூடிய அளவிற்கு

21st March 1961]

சொல்லப்பட்டிருக்கிறது. இது கனம் அமைச்சர் அவர்களுக்குத் தெரியுமா? ஆகவே இதுபோன்ற நிலைமை இருக்கின்ற காரணத்தினால், உடனடியாக இதுபோன்று ஸ்டைபண்ட் கொடுத்து டாக்டர்களைப் படிக்க வைப்பதற்கு அரசாங்கம் முன் வருமா என்று கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : ஏதோ சிறுபான்மையோர் சொல்லி இருக்கலாம். பெரும்பான்மையோர் இப்போது நல்ல முறையிலே தான் வேலை செய்கிறார்கள். அதனால் சில வருஷங்களுக்கு முன்னால் 50, 60 பிரைமரி ஹெல்த் சென்டர்களிலே டாக்டர்கள் இல்லாமல் இருந்தது, இப்போது குறைந்திருக்கிறது. இப்போது 118 பிரைமரி ஹெல்த் சென்டர்களில் டாக்டர்கள் இருக்கிறார்கள். அங்கெல்லாம் அவர்கள் சேவா மனப்பான்மையுடன்தான் வேலை செய்கிறார்கள். எப்போது பார்த்தாலும் நாம் குறையே சொல்லிக்கொண்டிருந்தால், அவர்கள் எவ்வளவு வேலை செய்தாலும் குறையே சொல்கிறார்களே என்று, பழைய மாதிரியே செய்யலாம் என்ற எண்ணத்திற்கு இடம் ஏற்படும். ஆகவே, இப்படி குறை சொல்ல வேண்டாமென்று கேட்டுக்கொள்கிறேன்.

### *Calling bells in hospitals*

* 962 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

சர்க்கார் ஆஸ்பத்திரிகளில் டாக்டர்களையும் நர்சுகளையும் அழைக்க *Calling bell*-களை வைக்க உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : No, Sir.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், நமது ஆஸ்பத்திரிகளிலே டாக்டர்கள், நர்சுகள் மிக மிகக் குறைவாக இருப்பது கனம் அமைச்சர் அவர்களுக்குத் தெரியும். ஆகவே பேஷண்டுகள் அவர்களை அடிக்கடி கூப்பிடுவது என்று சொன்னால், ரொம்பவும் கஷ்டமாக இருக்கிறதென்ற காரணத்தினால், அவர்களுக்கு ஆபத்து ஏற்படக்கூடிய நேரத்திலே உதவிக்கு அழைப்பதற்கு இந்தமாதிரி காலிங் பெல்லை வைக்க ஏற்பாடு செய்யப்படுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்தக் கேள்வியில் கனம் அங்கத்தினர் காலிங் பெல் கேட்பது நோயாளிகளுக்கு அல்ல, நர்சுகள் டாக்டர்களைக் கூப்பிடுவதற்கு என்று சொல்லுகிறார்கள். எப்போதும் டாக்டர்களுடனேயே நர்சுகள் இருப்பதால், அவர்களுடன் கூடப் போவதால் காலிங் பெல் எதற்கு ?

### *Dairy farm (Madurai)*

* 963 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மதுரையில் ஒரு பால் பண்ணை ஆரம்பிக்க உத்தேசமிருக்கிறதா ?

(இ) அதற்கு எவ்வளவு செலவாகும் ?

(உ) மதுரை சிலைமான் அருகே உள்ள சக்கிமங்கலத்தில் காலியாக உள்ள நிலத்தை இதற்குப் பயன்படுத்த உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.

(*b*) & (*c*) Do not arise.